



# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை


## வாழிய நீ!

தமிழ்பிறந்த தென்பொதியைத்
தாய்மடியில் தவழ்ந்ததனுல்
அமுதம்போல் மிதந்தெங்கள்
அயர்வினைநீ போக்குதியோ?
தென்பொதியை பெற்றகுளிர்த்
தென்றலே வாழியநீ!

நீடுயர்நற் சாரல்தவழ்
நீள்மலையிற் பிறந்ததனுல்
கோடையிலும் நீமிதந்தே
கொள்ளையின்பம் தருகுதியோ?
தென்பொதியை பெற்றகுளிர்த்
தென்றலே வாழியநீ!

சந்தனமும் செண்பகமும்
தழைத்தோங்கும் மலைப்பிறந்து
வந்ததனுல் நீயெங்கள்
மனங்குளிர வீசுதியோ?
தென்பொதியை பெற்றகுளிர்த்
தென்றலே வாழியநீ!

தேனூறும் தென்பொதியைத்
திருமுடியில் தோன்றியதால்
மேனியினைத் தழுவுகையில்
மிகஇனிமை செய்குதியோ
தென்பொதியை பெற்றகுளிர்த்
தென்றலே வாழியநீ!

— சாமி பழனியப்பன்

## நம் கடமை

செடி வைத்தவன் தண்ணீர் ஊற்றமாட்டானு என்ற தத்துவத்தை நாட்டில் சிலர் பேசி வருகின்றனர். இத்தத்துவத்தை மட்டும் நம்பி நாம் சும்மா இருப்போமானுல் புது முயற்சிக்கு இடமில்லாமல் போவதோடு வாழ்வும் வளம்பெருது.

நாட்டில் இறப்பை விடப் பிறப்பு அதிகமாகியிருக்கிறது. எனவே புது முயற்சிகளை மேற்கொண்டு உணவு உற்பத்தியையும் பிற வசதிகளையும் பெருக்க அரசாங்கம் முயற்சித்துத் தான் ஆகவேண்டும்.

உணவு உற்பத்தியில் ஈடுபட்டுள்ள உழவர்கள் உள்ளத்தில் தங்கள் உற்பத்தியின் பயன் தங்கட்கும் இருக்கிறது என்ற எண்ணம் பிறக்கச் செய்தால்தான் உழவர்கள் எழுச்சியுடன் உற்பத்திப் பெருக்கத்தில் ஈடுபடுவார்கள்.

பலரும் வாழவேண்டும்; ஒரு சிலர் மட்டும் வாழ்ந்தால் போதாது. பலரும் வாழாத நிலையில் ஒருசிலர் மட்டும் நீண்டநாள் நல்வாழ்வு வாழ முடியாது.

புதிய வாழ்க்கையையும் வாழ்க்கைத்தர உயர்வையும் நம்நாட்டில் கோடிக்கணக்கான மக்களுக்கு அளிப்பதை நம் கடமையாகக் கொள்ளவேண்டும்.

கட்டியிருக்கும் துணிக்கு மாற்றுத் துணி பெற வழி செய்வது நம் கடமை. 'நம் வாழ்க்கை நிலை உயர வழியில்லை; நம் குடிசைதான் என்றும் நமக்கு' என்ற எண்ணம் ஏழைக்கு ஏற்பட்டால் நாம் ஏன் உழைத்து உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என அவர்கள் எண்ணமாட்டார்களா?

முதலமைச்சர்

திரு. காமராஜ்

24—4—1960

இறக்கைகள் உள்ள பறவைதான்; எனினும் பறக்க முடியாத பறவை; மணிக்கு 30 மைல் வேகத்தில் கடலில் நீந்திச் செல்லும். இந்தப் பறவையினத்தில் ஆணும் பெண்ணும் கற்புநெறி தவறாமல் வாழ்கின்றன! ஆம்.

# பென்குவின்

– லின்பூல் –

தென் துருவத்திலே மட்டும் வாழும் பென்குவின் — முழுப் பெயர் அடெலி பென்குவின் — ஒரு விந்தையான பறவையாகும். "தென் துருவத்துக் கோமாளி" என்றும் இதற்குப் பெயர் உண்டு. ஆராய்ச்சி விஞ்ஞானிகள் பரிசீலனை செய்துள்ள மிகமிக விந்தையான பறவைகளில் இதுவும் ஒன்று.

ஜான் ஹாப்கின்ஸ் சுகாதாரப் பள்ளியைச் சேர்ந்த டாக்டர் வில்லியம் ஜே. எல். ஸ்லேடன் 12 ஆண்டுகளுக்கு மேலாக இந்த விந்தைப் பறவையைப் பற்றி ஆராய்ச்சி நடத்தி வந்திருக்கிறார். பென்குவின் பறவையைப் பற்றி அவர் பல விஷயங்களை நன்கு அறிந்து இருக்கிறார்.

## பறக்காத பறவை

பென்குவின் இறகுள்ள பறவை தான்; ஆனால் பறக்க முடியாது. பல பென்குவின்கள் சேர்ந்தால் அது பறவை "ஈட்டம்" அன்று; பறவைக் "கூட்டம்" ஆகும். இந்தப் பறவைகள், முன்புறம் வெள்ளை நிறமும் பின்பக்கம் கருப்பு நிறமும் கொண்டதாகத் தூய வெள்ளை 'டை'யும், நீண்டு தொங்கும் அங்கியும் அணிந்த கனவான்கள் மாதிரி தோற்றமளிக்கின்றன.

மனிதர்களைப் போலவே இந்தப் பறவைகளும் கூடி வாழும் குணம் படைத்தவை; சேர்ந்து பழகும் தன்மையுடையவை. மிகப் பலமான குடும்ப உறவுகளும் இந்த பென்குவின் பறவைகளுக்கு உண்டு. மீன்களைப் போல நீந்துகின்றன. மணிக்கு 30 மைல் வேகத்தில் சிறு கடல் பிராணிகளைப் போல் நீந்துகின்றன. வானை நோக்கித் தாவுகின்றன. "ஆர்க் ஆர்க்" என்று கூச்சலிட்டுக் கொண்டு தாவுகின்றன.

தென் துருவ மண்டலத்தில் மட்டும் வாழும் இந்த அதிசயப் பிராணியைக் கூண்டிலடைத்துக் காப்பாற்றுவது மிகக் கடினம். ஆகையால் அதைப்பற்றிய ஆராய்ச்சியை அதனுடைய இயற்கையான இருப்பிடத்தில்தான் நடத்த வேண்டும்.

பென்குவினைப் பிடிப்பது எளிது. இதனால் டாக்டர் ஸ்லேடன் தமது ஆராய்ச்சிகளின் போது 338 பறவைகளைப்பிடித்து இலேசான அலுமினிய வளையம் ஒன்றை அவற்றின் கழுத்தில் மாட்டி அடையாளம் செய்தார். வேறு 1360 பறவைகளைப் பிடித்து வர்ணம் தீட்டிக் குறியிட்டார். ஒவ்வொன்றுக்கும் ஓர் அடையாள எண் இருந்தது. தொலை நோக்கிக்கண்ணாடி மூலம் இந்த எண்களை எளிதில் படிக்கலாம்.

இரண்டு ஆண்டுக் காலம் இந்தப் பறவைகளின் நடமாட்டத்தை டாக்டர் ஸ்லேடன் கவனித்து வந்த காரணத்தால், பென்குவின் பறவைகளைப்பற்றி மக்களிடையே இருந்து வந்த சில தவறான கருத்துக்களைக் களைவதற்கு சாத்தியமாயிற்று. அத்துடன் சில புதிய தகவல்களையும் தந்துள்ளார்.

## குஞ்சு பொரிக்கும் காலம்

பென்குவின் பறவைகள் உணவுக்காக மாரிக் காலத்தைக் கடலிலேயே கழிக்கின்றன என்ற உண்மையை டாக்டர் ஸ்லேடன் கண்டு கொண்டார். சிறு கடல் பிராணிகளைத்தான் பென்குவின்கள் புசிக்கின்றன. வசந்த காலத்தில் அவை முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பதற்குரிய இடத்திற்கு 200 மைல் தூரம் வரை கூடச் செல்கின்றன. சில சமயங்களில் பனிக்கட்டிகள் மீது இவை 60 மைல் வரையிலும் கூட ஆடி அசைந்து நடந்து செல்ல வேண்டியிருக்கும். ஒவ்வொரு ஆண்டிலும் இந்தப் பறவைகள், முட்டையிடுவதற்குப் பழைய இடத்திற்கே திரும்பி வருகின்றன. பென்குவின் பறவைகள் பெண்ணும் சரி ஆணும் சரி கற்பு நெறி தவறுவதில்லை. கடலிலிருந்து திரும்பி வருகையில் வழக்கமாகக் குஞ்சு பொரிக்கும் இடம் இன்னும் பனிக்கட்டியால் மூடப்பட்டிருந்தால் கூட, அந்த இடத்தை விட்டுப் போவதில்லை.

மூன்று வாரங்களில் இரண்டு முட்டைகளை இடுகிறது பென்குவின். ஆணும் பெண்ணும் வாரக் கணக்கில் உணவில்லாமல் இருப்பதால் அடைகாக்கும் பணியை ஆணும் பெண்ணும் மாறிமாறிச் செய்கின்றன. ஆண் இரை தேடக் கடலுக்குச் செல்கையில் பெண்ணும், பெண் இரை தேடப் போகையில் ஆணும், அடை காக்கின்றன. இரண்டு வாரத்திற்கொரு தடவை பணியை மாற்றிக் கொள்கின்றன. 35 நாள் வரை அடை காக்க வேண்டியிருக்கிறது.

குஞ்சுகளுக்கு இறக்கை முளைக்கும் வரை பெற்றோர்கள் தாம் உணவு அளித்து பராமரிக்கின்றன தங்களுடைய குஞ்சுகளை மட்டும்தான் பெற்றோர்கள் கவனித்துக் கொள்கின்றன என்பதையும் டாக்டர் ஸ்லேடன் கண்டுகொண்டார். 8 அல்லது 9 வாரம் ஆனதும் குஞ்சுகளைப் பெரிய பறவைகள் கைவிட்டு விடுகின்றன.

குஞ்சுகளுக்குத் தாய்ப் பறவையும், தந்தையும் நீந்தக் கற்றுக் கொடுக்கின்றன என்பது சில ஆராய்ச்சியாளர்களின் கருத்து. ஆனால், இவை தாமாகவே நீந்தக் கற்றுக் கொள்கின்றன என்று டாக்டர் ஸ்லேடன் கண்டு கொண்டார். முதன் முதலாக அவை நீந்த முயற்சிப்பது விகாரமாக இருந்தாலும் பார்க்க வேடிக்கையாக இருக்கும் என்கிறார் டாக்டர் ஸ்லேடன்.

## ஆராய்ச்சி ஏன்?

பென்குவின் பறவைகளைப் பற்றி ஆராய்ந்து அறிவதற்கு இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்வானேன்? நீர்ப் பறவைகளுக்கும் வேறு சில பறவைகளுக்கும், சில சமயம் மனிதனுக்கும்கூட காணப்படும் 'ஆஸ்பெர்கில் லோஸிஸ்' என்ற நோய்க்கு சிகிச்சை கண்டு பிடிப்பதில் முனைந்திருக்கிறார் டாக்டர் ஸ்லேடன். பென்குவின் பறவைகள் எவ்வாறு வெப்பத்தை வெளியிடாமல் வைத்திருக்கின்றன என்பதைப் பற்றி அவர் ஆராய்ச்சி செய்தார். கால் வழியாக வெப்பம் குறைந்து போவதைத் தடுக்கக்கூடிய ஒப்பற்றதொரு ரத்தக் குழாய் அமைப்பு பென்குவின் பறவைக்கு இருப்பதைக் கண்டார்.

உப்புத் தண்ணீரைக் கொண்டு மட்டும் இந்தப் பறவைகளால் எப்படி உயிர் வாழ முடிகிறது என்பதையும் அவர் கண்டு பிடிக்க முயற்சி செய்கிறார். நடுங்கும் குளிரில் இவை பிழைத்திருக்கும் அதிசயம் பற்றியும் சில விவரங்களை அவர் தெரிந்து கொள்வார். சாதாரண ஜலதோஷம் சம்பந்தமான ஆராய்ச்சிக்கும் அவர் பென்குவினைப் பயன்படுத்துகிறார்.



# வருக சஞ்சீவி

மாந்தரிடை ஒரு தெய்வமாய்வந்த காந்தியின்
மலரடித் துகளார்ந்திடும்
மண்டலம் தன்னிலே மாபெருந் தலைவனுய்
மாநிலத் திசைகளெட்டும்
ஏந்தலிவன் ஒருவனே இணையிலான் என்றுபுகழ்
ஏய்ந்தபண் டிதநேருவின்
எண்ணற்ற திட்டங்கள் நிறைவேற வும்செல்வர்
ஏழையிவர் என்றபேதம்
போந்தோட வும்புனித நல்வாழ்வு பூணவும்
பொறுப்பேற்ற தியாகசீலர்
புரந்திடும் தேசீய காங்கிரஸ் மாசபைப்
புகழார்ந்த தலைவரேறே!
ஆந்திரத் தாயீன்ற அரியமணி யே! எங்கள்
அன்புக் குகந்ததலைவா
ஆசியச் சோதிநல் ஆட்சிக் குகந்ததுணை
ஆனசஞ் சீவிவருக!

மாரதர் வில்வளைத் தேயிந்த மண்ணிடை
மாபெரும் போர்நடாத்தி
மாநிலத் தாட்சியை மாற்றியும் ஆக்கியும்
மக்களை மக்கள் என்றே
ஓரா திருந்திட்ட தோர்காலம் மற்றிந்த
உலகவர லாற்றிலென்றும்
ஒருவரும் காணுத ஒளியெனும் அஹிம்சையாம்
ஒருபெரும் புரட்சிசெய்தே
வாராது போல்வந்த மாமணிதன் வழிவந்த
வற்ருத தியாகசீலர்
வந்தனைக் குரியவா மாபெருந் தியாகனே
வரவுநல் வரவாகுக
தாரணி வியந்திடத் தாயகம் வாழ்ந்திடத்
தன்னிகரி லாதசெங்கோல்
தாபித்த தேசீய காங்கிரஸ் தாபனத்
தலைவசஞ் சீவிவருக.

இனவேற்று மைகோடி மதவேற்று மைசாதி
மொழிவேற்று மைகோடியாம்
எண்ணிலாத் தீமைகள் எழுந்தெற்று மாகடல்
கடைந்தநவ காளிதன்னில்
இனமெழுந் திட்டெதிர் மூண்டதோர் நஞ்சுண்ட
மணிகண்ட னுன முதல்வன்
மோகனப் புன்முறுவல் முற்றும் மறைந்தெலாம்
முழுதுமோர் கனவாகுமுன்
மனக்கவலை மாற்றியே மக்கள்நிக ராகவே
மண்டலத் தாட்சிபுரியும்
மாதலைவன் நேருவின் வலக்கரம தாய்எங்கள்
மனத்தினுக் கினியமாண்பார்
தனக்குநிக ரில்லாது தமிழகம் காத்திடும்
தனிப்புகழ்க் காமராசர்த்
தம்பியென் றேதனைத் தானெண்ணி மகிழ்கின்ற
தலைவசஞ் சீவிவருக!

வீட்டுக்கு ஒருமகன் வீரம் விளைத்திட
வெளிப்பட்டு வருகவென்றே
வேந்தர்தரும் ஆணையில் வேல்தூக்கி வந்திடும்
வீரர்வழி வந்தநாட்டில்
நாட்டுக்கு விடுதலை நாடுவீர் தியாகமே
நல்லகதி காட்டுமென்ற
நாயகன் காந்திவழி நனிநின்று உடல்பொருள்
நல்லாவி யும் தந்தவர்
பாட்டிலே போய்மறைந் திட்டதால் வாய்த்திட்ட
புனிதநற் புதியவாழ்வில்
பாரதர் பதவிகட்கு ஆலாய்ப் பறக்கின்ற
பரிபவம் போய்மறையவே
நாட்டுக் குழைப்பதல் லால்எதும் நாடிடா
நல்லவர்க் கினிய தலைவா
நாட்டின் திருப்பணிக் கேற்றநற் றொண்டர்தம்
நாதசஞ் சீவிவருக.

கொள்ளெனில் ஆவென்று வாய்திறந் தும்கொடிய
கடிவாளம் என்றபோதோ
குதிரைவாய் திறவாத கொள்கையை மானிடர்
கொண்டொழுகும் நாளில்பதவிக்
கள்ளுக்கு மட்டுமே வாய்திறந் தும்கஷ்ட
காலத்தி லோடிமறையும்
காட்சியும் கண்ட துண் டாயினும் தலைவநீ
காங்கிரஸ் சபைநடாத்தத்
தள்ளத் தகாதென்று தாபனத் தலைமையைத்
தாவிச் சுமந்துகொண்டாய்
தனியமைச் சுத்தலைமை யாந்திரர்க் காயினும்
தாபனத் திருப்பணிக்கே
உள்ளத்தில் முதலிடம் என்றுகொண் டாய்நின்றன்
உள்ளநற் கொள்கையிதனை
ஊழியர்க ளாயுள்ள ஒவ்வொருவ ரும்உணர
உரியசஞ் சீவிவருக!

ஆந்திரச் சோதரரும் அரியசெந் தமிழரும்
அவிபக்த நாடாகவே
அன்பினல் இன்புற்று ஆர்வமுடன் வாழ்ந்திட்ட
அந்தநாள் தனிலுமுன்றன்
ஆந்திரச் சோதரர் அறிஞர்கா ளாதமது
அமைச்சும் துறந்துவிட்டு
அன்றுமவர் காங்கிரஸ் ஆக்கினைக் கேபணிந்து
அரியசெய லாளரானர்
வேந்தவைச் சௌராட்ர முதலமைச் சாயன்று
விளங்கிநின் றிட்டதேவர்
விடுதலை பெற்றதாய் நாட்டின் மலர்ச்சிக்கு
மேன்பொறுப் பேன்றுகொண்டார்
ஏந்தலே நீவந்த மரபினைப் புகழ்கின்ற
வார்த்தையெம் மிடமில்லையால்
எங்கள் அள கேசருடன் எம்மிடை எழுந்தருளும்
இனியசஞ் சீவிவருக!

உலகினில் பாரதம் போலஒரு நல்லாட்சி
உண்மையிற் பிறிதில்லையென்று
உற்றிடும் அன்னியர் ஒவ்வொரு வரும்புகழ்ந்து
உளமார வாழ்த்துகின்ருர்
நிலவிடும் பாரதம் தன்னிலே சென்னையை
நிகர்த்திடும் ராச்சியங்கள்
நிசமாக வேறில்லை என்கின்ற நற்புகழ்
நாட்டிடும் பெருமை கொண்டோம்
குலவிநின் முன்னிருந் தேமகிழ் கூடிடும்
கொள்கைசேர் தொண்டரெல்லாம்
குணக்குன் றெனும்தலைவன் அருணசலன்வழிக்
கூடியுண வாழ்த்துகின்றோம்
சலியாத நல்லுழைப் பொன்றையே நாடிடும்
சத்தியத் தொண்டருக்கே
சாற்றுவாய் அறவுரைகள் சாதிப்பை யால்சமய
சஞ்சீவி வாழ்கமாதோ!

வந்தே மாதரம்.

(காங்கிரஸ் தலைவர் சஞ்சீவி ரெட்டி அவர்கட்கு திருச்சி ஜில்லா காங்கிரஸ் ஊழியர்கள் சார்பில் நமது ஆசிரியர் அளித்த வரவேற்பு)




# நிலச் சீர்திருத்தங்கள் ஏழைகள் நன்மைக்கே

### காங்கிரஸ் தலைவர் திரு. சஞ்சீவி

காங்கிரஸ் தலைவர் திரு. சஞ்சீவி ரெட்டி அவர்களின் வருகையினால் சென்ற ஞாயிறு முழுமையும் திருச்சி நகரில் மாபெரும் தேசியத் திருவிழாவாக இருந்தது. சஞ்சீவி ரெட்டி நமக்குப் புதியவர் அல்லர். பழைய சென்னை ராஜ்யத்தின் அமைச்சராக இருந்தவர். பதவிகளை உதறிவிட்டு காங்கிரஸ் பணிபுரிய ஆர்வத்துடன் பலதடவை முன் வந்தவர். ஊழியர்களின் உள்ளம் அறிந்தவர். அவருடைய வருகையினால் நமது மாவட்ட ஊழியர்களிடையே எல்லையற்ற ஆர்வம் பொங்கித் ததும்பியதில் வியப்பில்லை.

சென்ற ஞாயிற்றுக்கிழமை நகருக்கு எழுந்தருளிய தலைவருக்கு முக்கிய தெருக்களிலெல்லாம் வரவேற்பு வளைவுகளும் தோரணங்களும் அமைத்து பல வேறு நிகழ்ச்சிகளில் காங்கிரஸ் தலைவர் கலந்து கொண்டார்.

திருச்சி நகரசபை காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் தில்லை நகர் ஆரம்பப் பள்ளியில் நல்விருந்தளித்து உபசரித்தனர்.

பகல் 3 மணிக்கு உறையூர் சாலை ரோட்டிலுள்ள மாவட்ட காங்கிரஸ் அலுவலகத்திற்கு சஞ்சீவி ரெட்டி அவர்கள் விஜயம் செய்தபோது தலைவர் டி. எஸ். அருணாசலம் அவர்கள் தேனீர் விருந்தளித்து உபசரித்தார். அடுத்து,

தேவர் மன்றத்தில் நடைபெற்ற ஊழியர்கள் கூட்டத்தில் மாவட்ட காங்கிரஸ் ஊழியர்கள் அனைவரும் திரளாகக் கூடியிருந்தனர். தலைவரின் கட்டளையை எதிர்நோக்கியிருந்த அவர்கள் உள்ளத்தையும், செயல்படத் துடிதுடிக்கும் வேகத்தையும் ஊழியர்களின் முகங்கள் உணர்த்தின.

காங்கிரஸ் தங்களுக்குச் செய்யும் நன்மைகளை மக்கள் தெளிவாக உணர்ந்திருப்பதாகத் திரு. ஓ. வி. அளகேசன் கூறினார். பின்னர்,

திரு. சஞ்சீவி ரெட்டி பலத்த கைதட்டலுக்கிடையே எழுந்து, 'நான் இம்முறை ஆங்கிலத்தில் பேசுவதற்கு மன்னிக்கவும்; அடுத்த முறை இங்கு பேசும் போது தமிழிலேயே பேசுகிறேன்' என்று கூறிவிட்டு ஆங்கிலத்தில் பேசினார். அவர் பேசும் போது குறிப்பிட்டதாவது.

''மக்களுக்குத் தொண்டு புரிய கிராமங்களில் ஏராளமாக வேலையிருக்கிறது; மக்களுக்கு காங்கிரஸ் பற்றிய செய்திகள் அவ்வப்போது எட்டும்படி செய்ய வேண்டும். காங்கிரசை நிகர்த்த ஓர் எதிர்க்கட்சி நாட்டில் கிடையாது. கம்யூனிஸ்ட், பிரஜா சோஷலிஸ்ட், சுதந்திரா கட்சிகள் இருக்கின்றன என்றால் அவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விதமான கோளாறு இருக்கிறது. எனவே உருப்படியான பயன் பெற எல்லோரும் காங்கிரசையே ஆதரிக்க வேண்டும் என்றும் ஸ்தாபனத்தின் சிறப்பையும், சீலத்தையும் பேணிக்காக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன்''.

ஜில்லா காங்கிரஸ் ஊழியர்கள் சார்பில் தலைவர் திரு. சஞ்சீவி ரெட்டி அவர்கட்கு நமது ஆசிரியர் அவர்கள் ஒரு வரவேற்பு வாசித்தளித்தார்கள். அவ்வரவேற்பு வேறொரு பக்கத்தில் வெளியிடப் பெற்றுள்ளது.

திரு. சஞ்சீவி ரெட்டி, அளகேசன், தலைவர் டி. எஸ். அருணாசலம், எம். எல். சி. திரு. துரைராச பிள்ளை எம். எல். சி.; ஆகியோர்க்கு காய்கறி வியாபாரிகள் சங்கச் சார்பில் ஓர் உபசாரம் நடத்தப்பெற்றது. திரு. அண்ணாமலை முத்துராஜா தலைமை வகித்தார்.

தலைவர் திரு. சஞ்சீவி ரெட்டி அவர்களுக்கு திருச்சி நகரசபை அளித்த வரவேற்பின்போது நகரசபைத் தலைவர் திரு. லூர்துசாமி பிள்ளை திரு. சஞ்சீவி ரெட்டிக்கு ஒரு வரவேற்பு வாசித்தளித்தார். தமக்கு அளிக்கப்பெற்ற வரவேற்புக்கு திரு. சஞ்சீவி ரெட்டி நன்றி தெரிவித்துப் பேசுகையில், சொற்ப வசதிகளுடன் நகரசபைகள் ஏராளமான பிரச்னைகளைத் தீர்க்கவேண்டியிருக்கிறது என்பது தமக்குத் தெரியுமென்றும், சிறந்த பாரம்பரியமுள்ள திருச்சி நகரசபை இவற்றைத் தீர்க்கும் என்ற நம்பிக்கை தமக்கு இருக்கிறது என்றும் குறிப்பிட்டார்.

நகரசபை உபத் தலைவர் திரு பெரியசாமி செட்டியார் நன்றி கூறினார்.

பின்னர், இரவு டாக்டர் மதுரம் விளையாட்டுத் திடலில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் திரு. சஞ்சீவி ரெட்டி பேசுகையில் ''இந்தியா நடுநிலைமை வகிப்பதாலேயே அது உலக நாடுகளிடையே கௌரவமான ஒரு ஸ்தானத்தை வகிக்கிறது; இந்தியாவின் கொள்கையைத் தான் இலங்கை, பர்மா, இந்தோனேஷியா, எகிப்து போன்ற நாடுகள் பின்பற்றுகின்றன'' என்று குறிப்பிட்டார்.

'நிலச் சீர்திருத்தங்களையும், கூட்டுறவுப் பண்ணை முறைகளையும் இப்போது எதிர்க்கின்ற ராஜாஜி தான் முன்பு ஜமீன் ஒழிப்புச் சட்டத்தையும், தஞ்சாவூர் பண்ணையாள் சட்டத்தையும் கொண்டு வந்தார். இவற்றை இப்போது அவர் மறந்துவிட்டுப் பேசுகிறார். நிலவுடைமை வரம்பு மசோதாவும் மற்ற நிலச் சீர்திருத்தச் சட்டமும் ஏழைகளின் நன்மையைக் கருதியே இப்போது அமுலாக்கப்படுகின்றன' என்றார்.

## ஜகத்குரு வருகை

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராசார்ய சுவாமிகள் ஏப்ரல் 25-ந் தேதி திருச்சிக்கு எழுந்தருளுவார்கள் என்றும், அன்று மாலை 6 மணிக்கு திருச்சி தேசிய கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் சுவாமிகளுக்கு ஒரு வரவேற்பளிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது என்றும் தெரிகிறது. அதன் பின் மலைக்கோட்டை நான்கு வீதிகளிலும் சுவாமிகள் பட்டணப் பிரவேசமாக அழைத்துவரப் பெறுவார்கள்.

### பஞ்சமுகலிங்கம்

திருவானைக்கோவில் வடக்குத் தெருவில் உள்ள கோவில் ஒன்றில் பஞ்சமுகலிங்கம் ஒன்று கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. பஞ்சமுக லிங்கம் நேபாளத்தில் ஒன்றிருப்பதாகவும், இந்தியாவில் வேறெங்கும் இல்லையென்றும் கூறப்படுகிறது.

### வேதநாயகர் மன்றம்

திருச்சி பாலக்கரையிலுள்ள விற்பன்னர் வேத நாயகர் மன்றத்தில் உள்ள வேதநாயகர் நூல்களையும், அவரைப் பற்றிய நூல்கள், படங்கள் அடங்கிய கண்காட்சியையும் கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன், சுவாமி மீனாட்சி சுந்தரம் ஆகியோர் பார்வையிட்டனர். மன்றத்தின் செயலாளர் திரு. பி. ஜே. லூயிசை அவர்கள் பாராட்டினர்.

### ஹானிமன் நாள்

திருச்சி, தமிழ்நாடு ஹோமியோபதி மருத்துவ சங்கச்சார்பில் டாக்டர் சாமுவேல் ஹானிமன் பிறந்தநாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. திருச்சி மாவட்டக் கலெக்டர் ஜனாப் குலாம் முகமது பாட்சா தலைமை வகித்தார். டாக்டர் வி. மாதவன் அனைவரையும் வரவேற்றார். டாக்டர் ஆசார், ஹானிமனைப் பற்றிப் பேசினார். டாக்டர் ஹாரிஸ் நன்றி கூறினார்.

## புது டில்லியில் சூ — என் — லாய்

சீனத் தலைமை அமைச்சர் திரு. சூ—என்—லாய் ஏப்ரல் 19ந் தேதி டில்லி வந்து சேர்ந்தார். இந்தியத் தலைமை அமைச்சர் நேருஜி விமான நிலையத்திற்குச் சென்று அவரைக் கைகுலுக்கி வரவேற்றார். சூ—என்—லாய் டில்லியில் ஒரு வாரம் இருப்பார். எல்லைத் தகராறு பற்றி நேருஜியுடன் பேச்சு வார்த்தை நடத்துவார். இந்திய அரசாங்க வெளி விவகார அமைச்சரகம் இந்திய வட எல்லையின் அதிகார பூர்வமான படம் ஒன்றை வெளியிட்டுள்ளது. இதில் 2500 மைல் எல்லையில் இந்தியாவுக்கும் சீனவுக்குமிடையே தகராறில் உள்ள பகுதிகள் எவை என்பது பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளது.

### வாழ்க்கை வரலாறு

மக்கள் சீனக் குடியரசின் சர்க்கார் கவுன்சில்பிரதமரானசூயென்—லாய் அவர்கள் 1898-ம் ஆண்டு பிறந்தார். இவர் 1949-ல் சீன மக்களின் அரசியல் ஆலோசனை மாநாட்டின் முதல் தேசீயக் குழுவின் உதவிப் பிரதமராகவும், மத்திய மக்கள் சர்க்காரின் மெம்பராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1949-ம் ஆண்டு அக்டோபர் முதல் தேதியன்று சீன மக்கள் குடியரசு ஸ்தாபிக்கப்பட்டபோது சூயென்-லாய் அவர்கள் மத்திய சர்க்காரின் பிரதமராகவும், அன்னிய நாட்டு மந்திரியாகவும் மக்கள் புரட்சி சேனைக் குழுவின் உதவி சேர்மனகவும் நியமிக்கப் பட்டார்.

1954-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் வருகை தந்து இந்திய—பர்மியப் பிரதமர்களுடன் சேர்ந்து பஞ்சசீல ஒப்பந்தம் செய்து கூட்டறிக்கை விடுத்தார். பின்னர் பாந்துங் நகரில் கூடிய ஆசிய,ஆப்ரிக்க நாடுகளின் மகாநாட்டில் மக்கள் சீனத்தின் தூதுக் குழுத் தலைவராக 1955 ஏப்ரலில் கலந்து கொண்டார். 1956 செப்டம்பரில் கூடிய சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் எட்டாவது தேசீய காங்கிரஸில் மத்தியக் கமிட்டி உறுப்பினராகவும், பொலிட்பீரோ உறுப்பினராகவும், வைஸ் சேர்மனகவும் தேர்தெடுக்கப்பட்டார்.

### ஒரு பிடி மண்கூட விடமாட்டோம்

இந்தியாவின் வடக்கு எல்லைப் பகுதியில் ஒரு பிடி மண்ணைக்கூடச் சீன தேசத்துக்கு விட்டுக்கொடுக்க மாட்டோம்; இந்தியாவுக்குத் தன் வலுவில் பெருமையுண்டு. உடம்பில் ஒரு துளி ரத்தம் உள்ளவரை தங்கள் தேசத்துக்காகப் போராட இந்திய மக்கள் தயாராக இருக்கிறார்கள். இதற்காக வெளி நாட்டாருடன் ராணுவ உடன்படிக்கை செய்து கொள்ளமாட்டோம்.

சீனப் பிரதமருடன் நடத்தும் பேச்சு வார்த்தை எவ்வளவு தூரம் வெற்றியடையும் என்று கூறமுடியாது. ஆனல் எல்லைப் பகுதிகளை இந்தியா விட்டுக் கொடுக்காது என்பது மட்டும் உறுதி.

—பாட்னவில் நேருஜி

### சென்-யீ

சீனப் பிரதமருடன் வந்துள்ள சென்-யீ அவர்கள் 1901-ல் பிறந்தார். 1949-ல் சீன மக்கள் குடியரசின் உதவிப் பிரதமராகவும், அயல்நாட்டு விவகார மந்திரியாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார். கிழக்கு சீன விடுதலைப் படையின் ராணுவத் தலைவர்; புரட்சி ராணுவக் கமிட்டியின் அங்கத்தினர் 1949 முதல் 1956 வரை ஷாங்காய் நகரின் மேயராக இருந்திருக்கிறார். பாந்துங் மகாநாட்டில் கலந்துகொண்டார். சீன சர்க்காரின் அரசியல் ஆலோசனைமகாநாட்டின் உறுப்பினர். சீனவின் தளபதியாகவும் இருக்கிறார். சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியின் பொலிட்பீரோ மெம்பர். அரசியல் ஆலோசனை மகாநாட்டின் உதவித் தலைவருமாவார்.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஷ 25 ] 24-4-1960 [ வாரம் 25

## உணர்ந்து நடந்து கொள்க!

இந்திய சீன எல்லைத் தகராறு பற்றி இருநாட்டுத் தலைமை அமைச்சர்களும் புது டில்லியில் பேச்சுவார்த்தை நடத்திக்கொண்டிருகின்றனர். பேச்சுவார்த்தையின்முடிவு குறித்து இருநாடுகளின் மக்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அது பற்றி எழுகின்ற ஹேஷ்யங்களுக்கும் குறைவில்லை. இது இயல்புதான்.

'சீனுவுக்கு விட்டுக்கொடுக்கக்கூடாது; அப்படி நடந்துகொள்ளவேண்டும்; இப்படி நடந்துகொள்ளவேண்டும்' என்றெல்லாம் ஆலோசனை கூறும் 'போதகர்' களுக்கும் குறைவில்லை. இவற்றிற்கிடையே, மனிதகுல மாணிக்கமான நமது இந்தியத் தலைமை அமைச்சர் நேருஜி அவர்கள்,

'இந்தியாவின் வடக்கு எல்லைப் பகுதியில் ஒருபிடி மண்ணைக்கூடச் சீன நாட்டுக்கு விட்டுக்கொடுக்கமாட்டோம்; இந்தியாவுக்குத் தன் வலுவில் நம்பிக்கையும் பெருமையும் உண்டு. உடம்பில் ஒரு துளி இரத்தம் உள்ள வரை தங்கள் நாட்டுக்காகப் போராட இந்திய மக்கள் தயாராக இருக்கிறார்கள்' என்று தெளிவாகக் கூறியிருக்கிறார்.

எல்லைத் தகராறு குறித்துப் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக இந்தியாவுக்கு வந்திருக்கும் சீனத் தலைமை அமைச்சர், 'இந்தியா சீனு இருநாடுகளுக்குமிடையே நட்பும் நிறைந்த ஒத்துழைப்பும் நீண்டநாளாக இருந்து வந்துள்ளது; இதைப்பாதுகாத்து நீடிக்கச்செய்யும் பெரு விருப்பத்தோடு பார்க்கும்போது, 'இந்த எல்லைத் தகராறு மிகச்சிறிய விஷயமாகும்; இது ஒரு வரம்புக்கு உட்பட்ட தற்காலிகத் தன்மை வாய்ந்த பிரச்னைதான்' என்கிறார்.

உண்மையில், இந்த எல்லைத்தகராறில் பறிகொடுத்தவர்கள் நாம்; பறித்துக்கொண்டவர்கள் அவர்கள். நாடு பிடிக்கும் வெறிநோக்கோடு நாம் படையெடுத்துச்சென்று எல்லையைப் பறிகொடுத்தோமா? இல்லை. அந்த வெறி நோக்கோடு படையெடுத்தவர்களும் அவர்கள்; பறித்துக் கொண்டவர்களும் அவர்கள். அவ்வாறிருக்க, எல்லையைப் பறிகொடுத்து நிற்கும் நம்மிடமே வந்து 'எல்லைத்தகராறு மிகச்சிறிய விஷயம்; வரம்புக்கு உட்பட்ட தற்காலிகத் தன்மைவாய்ந்த பிரச்னைதான்' என்று அவர் கூறுவதென்றால் அவருக்கு எத்துணை நெஞ்சழுத்தம் இருக்கவேண்டும்? அதுமட்டுமல்ல, அவர் நம்மைப்பற்றி என்னதான் கருதிக்கொண்டிருக்கிறார்? அந்த விந்தை மனிதரின் வேடிக்கைப் பேச்சைக் கேட்டும் நாம் நெஞ்சம் கொதித்தெழாத நிலையில் பொறுமையைக் கடைபிடிக்கிறோம் என்றால் அதுதான் நமக்கேயுரிய தனிப்பண்பாடு. இந்தப் பண்பாட்டு உணர்ச்சியை சீனத்தலைமை அமைச்சர் உணர்ந்தாலும் சரி உணர முடியாத நிலையில் இருந்தாலும் சரி, ஒன்றை மட்டும் அவர் நன்றாக நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

எல்லைத்தகராறு சம்பந்தமாக நியாயமான—நல்லதொரு முடிவு காணப்படாவிட்டால் சீனர்களுக்குத் தீராத பெருந் தலைவலியாகவே அது இருக்கும்.

மேலும், எல்லைத் தகராறு சுமுகமாக—நியாயமாகத் தீர்க்கப்படவேண்டும் என்று நாம் குறிப்பிடுகிறோம் என்றால், அவர்கள் கையை நறுக்கிக்கொண்டு நமக்கு எதையும் தரவேண்டும் என்று நாம் கேட்கவில்லை. நம்மிடமிருந்து அவர்கள் பறித்துக்கொண்ட நமக்குச்சொந்தமான பகுதிகளைத்தான் நாம் கேட்கிறோம். எனவே இவ்விஷயத்தில் அவர்கள் ஒரு சிறிதும் மனமாச்சர்யமோ கசப்போ கொள்ளவேண்டியதில்லை. தவிரவும், சீனப்பிரதமர் கூறுவதுபோல 'பரஸ்பரம் விட்டுக் கொடுத்துத் தீர்வுகாண' விரும்பும் விருப்பத்திற்குப் பொருளே இல்லை. இதுவரை விட்டுக்கொடுத்து கௌரவமாக நடந்து கொண்டிருப்பவர்கள் நாம்தான். ஆதலின் இவற்றை யெல்லாம் உணர்ந்து நிரந்தரமான அமைதியும் நட்புறவும் நிலைபெறுவதற்கான வழியில் சீனத்தலைமை அமைச்சர் நடந்துகொள்ளவேண்டும்; இல்லையேல், தூங்கும் புலியைக் காலால் இடறிய குருடனின் நிலையை அணைத்துக்கொள்ள நேரிடும் என்று எச்சரிக்க விரும்புகிறோம்.

## திருமண அழைப்பு.

சார்வரி-ஷ சித்திரை-மீ 20-வ (2-5-60) திங்கள் காலை 5 மணிக்கு மேல் 6-30 மணிக்குள் எனது புதல்வி, செல்வி: **மதுராம்பாளுக்கும்**, செல்வன்: **கு. சுந்தரம்**, B.A., B.T., க்கும் திருச்சி தென்னூர், ராமச்சந்திரபுரம் 8-ம் நெ. இல்லத்தில் நடைபெறவிருக்கும் திருமணத்திற்கு நண்பர்கள் அனைவரும் இதனையே அழைப்பாக ஏற்று வருகை தந்து சிறப்பிக்க வேண்டுகிறேன். வரவேற்பு மாலை 4 மணி அளவில்.

அன்புள்ள,
**திருலோக சீதாராம்,**
ஆசிரியர், சிவாஜி.

## தமிழகப் புலவர் குழு

தமிழகப்புலவர் குழுவின் ஐந்தாவது கூட்டம் அண்ணாமலைப் பல்கலைகழகத்தில் ஏப்ரல் 16, 17 ஆகிய இருநாட்களிலும் கூடியது. புலவர் பெருமக்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழக விருந்தினர் விடுதியில் தங்கினர்.

இரண்டாம் நாள் காலை 9 மணி அளவில் பட்டமளிப்பு விழா மண்டபத்தில் புலவர் குழு துவங்கிற்று. குழுவின் அமைப்பாளர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் புலவர் குழுவின் செயல் முறைகளையும், அண்ணாமலைப் பல்கலைக் கழக இணைவேந்தர் செட்டிநாட்டரசர் திரு. எம். ஏ. முத்தையசெட்டியார், எம். எல். ஏ. அவர்களும் துணை வேந்தர் திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை அவர்களும் புலவர் குழு கூடி ஆய்வதற்கிடமாகப் பல்கலைக்கழகத்தைக் கொடுத்துதவிய பெருந்தன்மையையும் விரித்துரைத்தார். அன்று மாலை புலவர் குழுவிற்கு நகரசபை ஒரு வரவேற்பளித்தது.

புலவர் குழுக் கூட்டத்தில் தமிழ் வளர்ச்சி பற்றிப் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாஸ்கோவில் நடைபெறும் அனைத்துலகக் கீழ்த்திசைக்கலை மாநாட்டிற்குப் புலவர் குழுவின் சார்பில் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரைப் பிள்ளையும், இப்போது மாஸ்கோவில் உள்ள பண்டித பி. ஆர். மீனாட்சிசுந்தரம் பிள்ளையும் கலந்துகொள்ள உரிமையளிப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

கலைக்கல்லூரிகள் புலவர் கல்லூரிகள், உயர்நிலைப்பள்ளிகள் ஆகியவற்றின் தமிழ் நிலை பற்றிய தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

மத்திய அரசியலார் திருவள்ளுவரின் உருவத்தை அஞ்சல் தலையில் வெளியிட்டதைப் பாராட்டியும், மணியாடர் பாரங்கள், தந்தியடித்தல், போன்றவற்றைத் தமிழிலேயே நிகழ்த்திக் கொள்ளும் வாய்ப்பினைத் தமிழ் மக்கட்கு அளிக்குமாறு இந்தியத் தபால் தந்தித் துறையினரைக் கேட்டுக்கொண்டும், பல்கலைக் கழகம், கல்லூரி, உயர்நிலைப்பள்ளி அறநிலையம், பூங்கா, உணவு விடுதி, தெரு முதலியவற்றிற்குத் தமிழ்ப் பெரியார்களின் பெயர்களை வைக்குமாறு தமிழ் மக்களைக் கேட்டுக்கொண்டும் பல தீர்மானங்கள் நிறைவேறின.

## கூட்டுறவு இயக்கம்

இந்தியாவில் கூட்டுறவு இயக்கமானது இன்று நேற்று ஏற்பட்டதல்ல. சுமார் 55 ஆண்டுகளாக இருந்து வந்திருக்கிறது.

1957-58ம் ஆண்டில் 2·57 லட்சம் கூட்டுறவு சங்கங்கள் இருந்தன; அவைகளில் மொத்தம் 2·1 கோடி அங்கத்தினர்கள் இருந்தார்கள். அவைகளின் பங்கு மூலதனமும் இருப்புத் தொகைகளும் சேர்ந்து மொத்தம் 187 கோடி ரூபாய்; நடைமுதல் மூலதனம் 696 கோடி ரூபாய்.

விவசாயத்துறைக் கடன் வசதி சங்கங்கள் மொத்தம் 1·67 லட்சம் இருந்தன; அவை மிகவும் முக்கியமான ஒற்றை ரகக் கூட்டுறவு நிறுவனங்களாக அமைந்திருந்தன. கூட்டுறவு சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில் அந்தச் சங்கங்களின் விகிதாச்சாரம் 64·9 சதவிகிதமாகும். இந்த சங்கங்கள் மொத்தம் சுமார் 2·69 லட்சம் கிராமங்களில் வியாபித்திருந்தன.

கடன் வசதி இல்லாத சங்கங்களிடையே, நெசவாளர்களின் கூட்டுறவு சங்கங்கள், இதர தொழில் துறைக் கூட்டுறவு சங்கங்கள் ஆகியவை பிரதான தொகுதியாக அமைந்துள்ளன; அவைகளின் எண்ணிக்கை முறையே 9608, 10117 ஆகும். அவைகளுக்கு அடுத்த ஸ்தாபனத்தை கரும்பு சப்ளை சங்கங்கள் வகிக்கின்றன. அந்த சங்கங்கள் பிரதானமாய் உத்திரப் பிரதேசத்திலும் பீஹாரிலும் இருக்கின்றன.

விவசாயத்துறை கடன் வசதிக் கூட்டுறவு சங்கங்கள் இரு வகைப்படும்; அதாவது முதலாவது வகைச் சங்கங்கள் குறுகிய கால, நடுத்தரக் காலக் கடன் வசதிகளையும், இரண்டாவது வகைச் சங்கங்கள் நீண்ட காலக் கடன் வசதிகளையும் அளிக்கின்றன.

குறுகிய கால, நடுத்தரக் காலக் கடன்கள் கிராமஅடிப்படை,கடன் வசதி சங்கங்களால் அளிக்கப்படுகின்றன; அவைகளில் அனேக சங்கங்கள், விதைகள், ரசாயன உரம், விவசாய உபகரணங்கள் முதலியவைகளை சப்ளை செய்வது போன்ற இதர அலுவல்களை மேற்கொள்வதற்கு வசதியாக இருக்கக்கூடியபடி உப விதிகளையும் மேற்கொண்டுள்ளன. இந்த சங்கங்களில் மொத்தம் 1·02 கோடி அங்கத்தினர்கள் இருக்கின்றனர்; அதாவது அவர்களின் எண்ணிக்கை மொத்த கிராமாந்தரக் குடும்பங்களில் சுமார் 16 சதவிகிதம் இருக்கும்.

அடிப்படை சங்கங்களிடமுள்ள சொந்தத் தொகைகளும், தங்களுடைய அங்கத்தினர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குப் போதியவையாக இல்லாதபடியால், அந்த சங்கங்கள் மத்திய கூட்டுறவு பாங்கிகளிடமிருந்து கடன் தொகைகளை வாங்கிக் கொள்கின்றன. இந்த பாங்கிகள் சமஷ்டி ஸ்தாபனங்களாகும்; இவை பெரும்பாலும் இணைக்கப்பட்ட சங்கங்களின் கட்டுப்பாட்டின் கீழும் நிர்வாகத்தின் கீழும் இருந்து வருகின்றன.

1957–58 கடைசியில் மொத்தம் 418 மத்திய கூட்டுறவு பாங்கிகள் இருந்தன; அவைகளின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனமும் இருப்புத் தொகைகளும் சேர்ந்து மொத்தம் 24·91 கோடி ரூபாய். அவைகளிடமிருந்த டெபாஸிட் தொகைகளின் அளவு 66 கோடி ரூபாய்.

ராஜ்ய கூட்டுறவு பாங்கிகளிடமிருந்தும் இதர ஸ்தாபனங்களிடமிருந்தும் மொத்தம் 49·8 கோடி ரூபாய் வரை கடன் தொகைகள் வாங்கப்பட்டிருந்தன. மத்திய கூட்டுறவு பாங்கிகளுக்கு ராஜ்ய கூட்டுறவு பாங்கிகள் நிதி வசதிகள் அளித்து வருகின்றன; ராஜ்ய கூட்டுறவு பாங்கிகள் பெரும்பாலும் மத்திய கூட்டுறவு பாங்கிகளுக்குச் சொந்தமானவையாகவும் அவைகளின் நிர்வாகத்தின் கீழ் உள்ளவையாகவும் இருக்கின்றன.

ராஜ்ய கூட்டுறவு பாங்கிகளின் செலுத்தப்பட்ட மூலதனம் மொத்தம் 11·92 கோடி ரூபாய். அந்த பாங்கிகள் டெபாஸிட் தொகைகளாகவும் கடன் தொகைகளாகவும் முறையே 44·44 கோடி ரூபாயும், 51·69 கோடி ரூபாயும் வாங்கின.

ராஜ்ய கூட்டுறவு பாங்கிகள் இந்திய ரிசர்வ் பாங்கிடமிருந்து நிதி வசதி பெறுகின்றன இந்திய ரிசெர்வ் பாங்கிக்கு கூட்டுறவு ஸ்தாபனங்களை வளர்ப்பதற்கான சட்டபூர்வமான பொறுப்பு இருக்கிறது.

## தேரோட்டி மகன்

புதுடில்லியில் தமிழ்நாடக விழாவைத் துவக்கிவைத்த இந்தியக் குடியரசுத் தலைவர், தென்னிந்தியா நமது பண்பின் உறைவிடமாகவும், சில இலக்கிய சம்பிரதாயங்களின் நிலைக்களனாகவும் திகழ்கிறதென்று கூறினார். மேலும் பேசுகையில்

தமிழ் நாடக மேடை உயர்ந்த பாரம்பரியமுடையதென்பது நமக்குத் தெரியுமென்றும் இந்திய மொழிகளில் தமிழ் மிகத் தொன்மை வாய்ந்தது என்றும் குறிப்பிட்டார்.

புதுடில்லியில் உள்ள தென்னிந்திய தியேட்டர்ஸ் நிறுவனத்தார் தமது கட்டிட நிதிக்காக ஏற்பாடு செய்துள்ள இவ்விழாவில் திரு. எஸ். வி. சகஸ்ரநாமம் குழுவினர் நான்கு நாடகங்களை நடிப்பார்கள்.

இந்தியக் குடியரசுத் தலைவரும், மற்ற விருந்தினரும் எஸ். வி. சகஸ்ரநாமம் குழுவினரின் "தேரோட்டி மகன்" நாடகத்தை கண்டு களித்தனர்.

---

**கரூர் டி. மு. கோர்ட்.**
**S. C. 799/59**

ஷேக் அலி ரூவுத்தர் —வாதி
அப்துல் ரஷீது ரூவுத்தர் —பிரதிவாதி

ஷை செம்பரில் வாதி பிரதிவாதி பேரில் நோட்டுப்படி ரூ. 263-50ம் செலவும் வட்டியும் கிடைக்க தாவா செய்து 16-6-60-ல் வாய்தா போடப்பட்டிருக்கிறது. அன்று ஆக்ஷேபணையை தெரிவிக்கத் தவறினால் ஒரு கட்சியாக தீர்மானிக்கப்படும்.

N. வேதாந்தாச்சாரியார்
அட்வகேட்.

4 | 3595 | 14

# விஞ்ஞான விந்தை

## கடிதம் பிரிக்கும் இயந்திரம்

கடிதங்களைப் பேட்டை வாரியாகப் பிரித்துத்தரும் அதிசயப் பொறி ஒன்றை நார்விச் அஞ்சல் நிலையத்தில் பரீட்சித்து வருவதாகவும், சோதனை வெற்றி பெற்றால், அஞ்சல்களை இன்னும் விரைவாக அனுப்பமுடியும் என்றும் போஸ்மோஸ்டர் ஜெனரல் திரு. ரெஜனால்டு பெவின்ஸ் அன்மையில் லண்டனில் கூறினார்.

## மண்ணில் மருந்து

எஸ்தோனிய விஞ்ஞானிகள் கடல் மண்ணிலிருந்து "பையோஜெலிக் ஸ்டிமுபேட்டர்" களின் இயல்புகளைப்பெற்றுள்ள "ஹூமிசோல்" என்ற புதிய மருந்துக் கலவை ஒன்றைக் கண்டுபிடித்துள்ளனர்.

ஒளிபுகும் தன்மையைத்தரும் இந்த திரவ மருந்தை தசையில் ஊசி மூலம் பாய்ச்சுவதன் மூலம், வீக்கத்-தடுப்பு விளைவு ஏற்படுகிறது. உள் சுரப்பிகளையும் இம் மருந்து நல்ல முறையில் பலப்படுத்துகிறது. மேலும், மூட்டுகள் சம்பந்தமான தீராத நோய்களை இது குணமடையச் செய்கிறது.

எஸ்தோனியக கடற்கரைப் பிரதேசத்திலும் தீவுகளிலும் மருத்துவத்திற்குப் பயன்படும் மண்களுக்கான 50-க்கு மேற்பட்ட இயற்கை ஆதாரங்கள் உள்ளன.

## இயந்திர மனிதன்

தானாக இயங்கும் வானிலை ஆராய்ச்சி 'நோக்கர்' ஒன்று சந்திர மண்டலத்திற்குச் செலுத்தப்படும். மனிதனை சந்திர மண்டலத்திற்கு அனுப்புவதற்கு முன்னால் இம்முயற்சி மேற்கொள்ளப்படும் என்று சோவியத் விஞ்ஞானி போரிஸ்டானிலன் தெரிவித்துள்ளார்.

மாஸ்கோவிலிருந்து வெளிவரும் சஞ்சிகை ஒன்றில் டானிலன் இது பற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அக்கட்டுரையில் அவர் மேலும் இந்த வானிலை ஆராய்ச்சி நோக்கரில் மின்சார மூளை பொருத்தப்படும். அம் மூளை சந்திரமண்டலத்திலிருந்து விஞ்ஞானப் புள்ளி விவரங்களை பூமிக்கு அனுப்பும். இந்நோக்கரை இயந்திர மனிதன் என்று கூறலாம். இந்த இயந்திர மனிதனால் சந்திரமண்டலத்தில் நடமாட முடியாவிட்டாலும் ஒரு நிலையான நிலையமாக விளங்கும் என்று கூறியுள்ளார். இதே போன்ற இயந்திர மனிதன் பிற கிரகங்களுக்கும் அனுப்பப்படுவது சாத்தியமே என்றும் அவ்விஞ்ஞான மேதை நம்பிக்கை தெரிவித்திருக்கிறார்.

## எண்ணெய் பிழியும் இயந்திரம்

நெற்றாக முதிர்ச்சியடையாத இளம் தேங்காயிலிருந்தும் எண்ணெய் எடுக்கும் புரட்சிகரமான இயந்திரம் ஒன்று இந்திய சர்க்காருக்கு அன்பளிப்பாகத் தரப்பட்டுள்ளது.

மேற்கு ஜெர்மனியில் உள்ள கிராஸ்மாபே என்னும் ஸ்தாபனம் இதை உருவாக்கியிருக்கிறது. மைசூரிலுள்ள உணவு ஆராய்ச்சிக் கழகத்துக்கு அதைக் கொடுக்கும்படி இந்த ஸ்தாபனத்தார் இந்திய சர்க்காரைக் கேட்டிருக்கிறார்கள்.

எண்ணெய் ஆட்டுவதற்கு வசதியாக கொப்பறையை உலர வைக்கும் வேலையும் நேரமும் இந்த இயந்திரத்தின் மூலம் மிச்சப்படுகின்றன. இதில் எண்ணெய் ஆட்டுகையில் தேங்காய் "மாவும்" தேங்காய்த் "தேனும்" உப பொருள்களாகக் கிடைக்கின்றன. இவற்றையும் மனிதர்கள் உட்கொள்ள முடியும். இப்போதுள்ள எண்ணெய் ஆட்டும் முறையில் கிடைக்கும் "மாவு" (பிண்ணாக்கு) கால் நடைகளுக்கே பெரிதும் பயன்படுத்தப்படுகிறது.

இந்த நவீன இயந்திரத்தைப் பயன்படுத்தினால் இப்போது எடுப்பதைப்போல இரண்டு பங்கு எண்ணெய் எடுக்கலாம் என்று இயந்திர சிருஷ்டியாளர்கள் சொல்லுகிறார்கள். இதன் மூலம் ஆண்டு ஒன்றுக்கு 15 கோடி ரூபாய் அன்னியச் செலாவணி மிச்சமாகும். இந்தியா இப்போது ஆண்டு ஒன்றுக்கு எண்ணாயிரம் டன் தேங்காய்எண்ணெய் இறக்குமதி செய்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

## சந்திரமண்டலப் பிரயாணம்

1970-க்குப் பிறகு மனிதன் சந்திரனுக்குச் சென்று வரக் கூடிய முறையில் அமெரிக்கா ஒரு விண்வெளி ஆராய்ச்சித் திட்டம் வகுத்துள்ளது. இது ஒரு பத்தாண்டுத் திட்டம். அமெரிக்க தேசீய விண் வெளி, விமான இயல் நிர்வாகம் ("நாஸா") இத்திட்டத்தை இப்பொழுது அறிவித்துள்ளது.

இவ்வளவு நுணுக்கமான நீண்ட கால விண் வெளி ஆராய்ச்சித் திட்டம் ஒன்றை அமெரிக்க அரசாங்கம் இதற்குமுன் உருவாக்கியதில்லை. அடுத்த பத்தாண்டுகளில் இத் திட்டப்படி 260 செயற்கைக் கோள்கள் செலுத்தப்படும். கருவிகளைக் கொண்டுபோய் சந்திரனில் இறக்குவது எப்போது, செவ்வாய் வெள்ளி ஆகிய கிரகங்களைச் சுற்றி ஆராய்வது எப்போது, விண் வெளியில் என்றும் இருக்கக்கூடிய ஓர் ஆய்வுக்கூடத்தை அமைப்பது எப்போது என்றெல்லாம் கவனமாக நிகழ்ச்சி நிரல் தயாரித்திருக்கிறார்கள்.

அமெரிக்க விண் வெளித் திட்டம் முதன்முதலாக உருவாக்க எண்ணுவது பிரமாண்டமான ஐந்து வரிசையுள்ள, பேராற்றல் வாய்ந்த ராக்கெட்டுகளாகும். இத்தகைய ராக்கெட்டுகளுக்கு உடனடியான தேவை எதுவும் இதுவரை இல்லை; அண்மையிலுள்ள வான வெளியை விஞ்ஞானத் தகவல்களுக்காக ஆராயும் பொருட்டு மிகமிக நுண்ணிய கருவிகளை வைத்து அனுப்புவதற்குச் சிறிய ராக்கெட்டுகள் போதும். அதனால் தான் பேராற்றல் மிக்க ராக்கெட்டுகள் இது வரை உருவாகவில்லை. இனி, விண்வெளி நிலையங்கள் அமைக்கவும், செவ்வாயையும், வெள்ளியையும் ஆராயவும் திட்டமிட்டிருப்பதால், பெரிய கருவிகள் வானில் நெடுந்தொலைவு அனுப்பப்படவேண்டும்; ஆகவே ராக்கெட்டுகள் அதிக ஆற்றலுள்ளவையாக இருக்கவேண்டும்.

இத்தகைய பேராற்றலுள்ள ராக்கெட்டுகளில் ஒன்று "சனி" எனப் பெயர்பெற்றுள்ளது. இது கிளம்பும்போது 15 லட்சம் ராத்தல் உந்துவிசை உள்ளதாக இருக்கும். பல ராக்கெட் பொறிகள் சேர்த்து அமைக்கப்பட்ட ராக்கெட் இது. பத்தாண்டுத் திட்டத்தின் பிந்திய கட்டங்களில் இத்தகைய ராக்கெட்டுகளே பெரிதும் தேவைப்படும்.

"சனி" ராக்கெட் முதன்முதலாக 1962-ல் செலுத்தப்படும். 1965-க்குள் இந்த ராக்கெட்டுகள் மூலம் ஆண்டுக்கு நான்கு வீதம் விண்வெளிக் கப்பல்களை அனுப்ப வேண்டுமென்பது திட்டம்.

1968-ல் "நோவா" ராக்கெட் பயன்படத் தொடங்கும். இது 15 லட்சம் ராத்தல் உந்து விசை பிறப்பிக்கத்தக்க ஓர் – அறை ராக்கெட் பொறி. இத்தகைய பல பொறிகளை இணைத்து, 60 லட்சம் ராத்தல் உந்து விசை பெறலாம்.

ராக்கெட்டுகளின் ஆற்றல் கூடக்கூட, அமெரிக்கா அதிகக் கனமானவையும் அதிகச் சிக்கல் வாய்ந்தவையுமாகிய கருவிகளை வானிலே செலுத்தும். திட்டப்படி 1967–69ம் ஆண்டு வாக்கில், "சனி" ராக்கெட்டின் உதவியால் 55 ஆயிரம் ராத்தல் எடையுள்ள கருவிகளை வானில் வலம் வருமாறு அமெரிக்கா அனுப்ப முடியும். இன்றைய ராக்கெட்டுகளை விட "சனி" ராக்கெட் 25 மடங்கு எடையைத் தூக்கவல்லதாக இருக்கும்.

திட்டப்படி 1962க்குள் சந்திரனில் கருவிகளைக் கொண்டுபோய் இறக்க வேண்டும்; பூமியைச் சுற்றி வலம் வருமாறு விண் வெளிக் கப்பலை மனிதன் இயக்கிச் செல்ல வேண்டும்.

1964ல் முதல் முதலாக ஒரு விண் வெளிக் கப்பல் சந்திரனைச் சுற்றிப்பார்த்து விட்டுப் பூமிக்குத் திரும்பும். சந்திரனுக்கு மனிதன் சென்று வருவது 1970க்குப் பிறகு நடக்க வேண்டுவது எனத் திட்டம் குறிப்பிடுகிறது.

"மனிதன் சந்திரனுக்குப் போய்விட்டுப் பத்திரமாகப் பூமிக்குத் திரும்பி வருவதற்குள்ள இடையூறுகளைத் தீர்க்க வேண்டும்; எங்கள் உயர்தர ஆராய்ச்சி, தொழில் நுட்பம் பற்றிய திட்டம் இதற்காக வகுக்கப்பட்டுள்ளது." என்கிறார் அமெரிக்க விண் வெளி நிர்வாகத்தின் துணை நிர்வாகி டாக்டர் ஹியூ எல். டிரைடன்.



## செய்திகள்

### பரம்பிக்குளம் நீர்

பரம்பிக்குளம் திட்டம், சிறுவாணி நதி நீர்ப்பங்கீட்டுப் பிரச்னை பற்றி சென்னை கேரளா பிரதிநிதிகளிடையே மே 10, 11. 12, தேதிகளில் மேற்கொண்டு பேச்சுவார்த்தைகள் நடக்கும் என்றும், பரம்பிக்குளம் நீர் பற்றி ஏற்கெனவே இருமாநிலப் பொறியியலாளரிடையேயும் ஓர் உடன்பாடு ஏற்பட்டிருந்தும், சென்னை அரசியலார் ஒப்பந்த நிபந்தனையினின்றும் அதிகப்படியான நீர் கேட்பதாலேயே மேற்கொண்டு பேச்சு அவசியமாயிற்று என்றும் கேரள உதவி முதலமைச்சர் திரு. சங்கர் பத்திரிகை நிருபர்களிடம் தெரிவித்தார்.

### டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்தோர்

சென்னை மாநிலத்தில் கடந்த மூன்ருண்டுகளில் டிக்கட் இல்லாமல் ரயிலில் பிரயாணம் செய்து, பிடிபட்டுத் தண்டிக்கப்பட்டோர் 46,611 பேர் என்றும் அவர்களுக்காக சென்னை அரசாங்கம் செலவிட்டது 1,95,117 ரூபா என்றும் போலீஸ் அமைச்சர் திரு. பக்தவத்சலம் தெரிவித்திருக்கிருர்.

### தபால் சேமிப்புப் பாங்குக் கணக்கு

தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்குகளில் பணம் போட்டிருப்பவர்கள் செக்கு மூலம் பண லேவாதேவி செய்வதற்கு இன்னும் அதிக வசதி ஏற்படும் பொருட்டு தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்குகளைக் கிளீயரிங் ஹவுஸ் அங்கத்தினர்களாக ஆக்குவதற்கு இப்போது ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. எங்கெங்கே பாங்கர்கள் கிளீயரிங் ஹவுஸ்கள் உள்ளனவோ அங்கெங்கெல்லாம் தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்க் அவைகளில் உப அங்கத்தினராக ஆக்கப்படவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இனிமேல் தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்க் செக்குகளைப் பிற ஷெட்யூல் பாங்குகள் மூலம் கொடுத்துப் பணமாக்கிக்கொள்ளலாம். இந்த வசதி தலைமைத் தபாலாபீஸ் கணக்குகள் விஷயத்தில் மாத்திரமல்லாமல் சப் போஸ்ட் ஆபீஸ் கணக்குகள் விஷயத்திலும் பிரயோகமாகும்.

### சர்வோதய மாநாடு

திருச்சி மாவட்டத்திலுள்ள லால்குடி வட்ட சர்வேதாய-பூமிதான இயக்க மகாநாடு 28-4-60-ந் தேதி தாளக்குடியில் திருப்பெருந்திரு. குன்றக்குடி அடிகளாரின் தலைமையில் நடைபெறும்.

தமிழ்நாடு பூமிதான இயக்கத் தலைவர் திரு. ச. ஜெகந்நாதன், மாநில பூமிதான யக்ஞ போர்டு செயலாளர் திரு. அ. அவையன், திருமதி. பொன்னம்மாள் எம். எல். ஏ., முன்னாள் மாவட்டக் கலெக்டர் திரு. ஆர். எஸ். மலையப்பன் ஆகியோர் கலந்துகொள்கிருர்கள். மற்றும் திரு. ப. ஜீவானந்தம், பி. எஸ். சின்னதுரை எம். எல். ஏ., குடந்தை ஏ. எம். ஜோசப், கலிவரதன் போன்ற சர்வகட்சிப் பிரமுகர்களும் அழைக்கப்பட்டிருக்கிருர்கள்.

### நாயுடுவின் மகன் ஜெர்மன் பயனம்

தொழில் விஞ்ஞானி ஜி. டி. நாயுடு அவர்களின் மகன் திரு, ஜி. டி. கோபால், வாெனலி, டெலிவிஷன் மற்றும் அவை சம்பந்தமான துறைகளில் தெழில் நுணுக்கத் தேர்ச்சிபெற்றுத் திரும்புவதற்காக ஜெர்மனிக்குச் சென்றிருக்கிருர்.

ஜெர்மனியின் தொழில் நுணுக்க ஒத்துழைப்புடன் கோவையில் புதிய தொழில்களைத் தொடங்குவது பற்றியும் அவர் அங்குள்ள தொழில் வல்லுநர்களுடன் கலந்தாலோசிப்பார்.

### விழி மசோதா

கண்ணின் கருவிழிகளை ஒட்ட வைத்துச் சிகிச்சை செய்யும் முறையில் நம்நாட்டு டாக்டர்கள் கைதேர்ந்து விட்டனர். எனவே, அதற்குத் தேவையான கருவிழிகளைத் தேடி அலைய வேண்டியுள்ளது. அனாதைப்பிணங்களின் கண்விழிகளை எடுத்துப் பத்திரப்படுத்தி உபயோகிப்பதற்கு வகை செய்யும் மசோதா ஒன்று சட்டசபையில் சென்னை அரசியலாரால் கொண்டுவரப்பட்டது.











## தமிழில் கடிதப் போக்குவரத்து

இவ்வாண்டு மே மாதம் 2-ந் தேதியிலிருந்து தமிழக மாவட்டக் காரியாலயங்களின் அலுவலக் கடிதப்போக்குவரத்துக்கும் தமிழ்மொழியைப் பயன்படுத்துவதெனச் சென்னை அரசியலார் முடிவு செய்துள்ளனர்.

## இராமநாதபுர மாவட்ட இரும்புக் கனி

இராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்த திருப்புத்தூர்த் தாலூகாவிலுள்ள காரைக்குடி தாலுகாவைச் சேர்ந்த அடுத்த வடிகுடிப்பட்டிக் கிராமத்தில் நிறைய இரும்பு கிடைக்குமென்பதற்கான ஆதாரம் கிடைத்துள்ளதாம்.

சுமார் 70 ஆண்டுகளுக்கு முன் அந்தக்கிராமத்தில் இரும்புக் கம்பிகள் தயாரிக்கப்பட்டுள்ளனவாம். கிரமத்தில் கிடைக்கும் செம்புருங் கற்களில் இரும்பு அதிக சத விகிதம் கலந்துள்ளதாகத் தெரிகிறது. ஸ்தல வளர்ச்சித் திட்டத்தின் கீழ் ஒரு பள்ளிக் கூடம் கட்ட மேற்படி கிராம வாசிகள் பூமியைத் தோண்டிய போது இரும்பு தயாரிக்க உதவும் அச்சுக்களும் இரும்பு அதிகமாகக் கலந்துள்ள செம்புருங் கற் பாறைகளும் காணப்பட்டனவாம்.

## தஞ்சையில் சைக்கிள் உற்பத்தி

தஞ்சையில் சைக்கிள் தொழிற்சாலை கட்டுவதற்கான நடவடிக்கைகள் துரிதமாக நடைபெறுகின்றன என்றும், அதற்கான கட்டிட வேலை முடிவடையும் நிலையில் இருக்கிறதென்றும், மின்சார வேலை வேகமாக நடைபெறுகிறதென்றும், கட்டிடம் தயார் ஆனதும் யந்திர அமைப்பு வேலை ஆரம்பமாகும் என்றும் வருகிற ஜூலை மாதத்தில் உற்பத்தி வேலைகள் ஆரம்பமாகும் என்றும் சென்னை மாநில தொழிலமைச்சர் திரு. வெங்கட்ராமன் தெரிவித்திருக்கிறார்.

இந்தத் தொழிற்சாலையைக் கட்ட டில்லி அரசாங்கம் 5 லட்சத்து 63 ஆயிரம் ரூபா கடனுக் கொடுத்திருக்கிறது. இந்தத் தொழிற்சாலையில் ஆண்டு ஒன்றுக்கு 6000 சைக்கிள்கள் உற்பத்தியாகும்.



பிரிட்டிஷ் ராணி எலிசபெத்தும் அவரது புதல்வன் இளவரசன் ஆண்ட்ரூவும்.

## கம்பள உற்பத்தி

சேலத்தில் கம்பளத் தொழிற்சாலை ஒன்று அமைக்க சென்னை அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. கம்பளி, சணல் ஆகியவற்றைக்கொண்டு தயாரிக்கப்படும் விரிப்புகளின் உற்பத்தியை அதிகரிக்க சென்னை அரசாங்கம் முடிவு செய்துள்ளது.

## தண்ணீர்ப் பள்ளி இளைஞர் காங்கிரஸ்

தண்ணீர்ப்பள்ளி இளைஞர் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் ஏப்ரல் 152 கோகுலம் பங்களாவில் திரு. கே.எ. தர்மலிங்கம் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம், பி. கிருஷ்ணமூர்த்தி தலைவராகவும், பி.ஆர். வெங்கடேசன் உப தலைவராகவும், எஸ். பி. சுப்பிரமணியம் காரியதரிசியாகவும், பி. ரெங்கராஜு உதவிக் காரியதரிசியாகவும், எஸ். செல்வன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். மற்றும் 13 பேர் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## 10 ஆயிர ரூபா நோட்டு

ஒரு ரூபாய், ஐந்து ரூபாய் நோட்டுகளைப்போல் ஐயாயிரம் ரூபாய் பத்தாயிரம் ரூபா நோட்டுக்களை வெளியிட மத்திய அரசியலார் முடிவு செய்துள்ளனர். நோட்டுக்களை ரிசர்வ் பாங்கி அச்சிட்டு வெளியிடும்.

# தென்னாட்டு ஓவிய மன்னன்

கோட்டாறு — இளந்தேவன்

மக்கள் மனப்பண்பை வளர்த்து அவர்தம் மகிழ்ச்சிக்காகக் கலைஞர்கள் கலைகளை ஆக்கினர். அக்கலைகள் அறுபத்தினான்கு என்பர். அவற்றுள் இசை, கவிதை, சிற்பம், ஓவியம் ஆகியவை அழகியற் கலைகளன்றி மக்களை மாக்கள் நிலையிலிருந்தும் வேறுபடுத்தும் சிறப்புடையனவாம். இசை, கவிதை என்பன செவிக்கின்பம் தருவன. ஓவியமும் சிற்பமும் அவரவர் கட்புலனால் உணர்ந்து இன்புறத் தக்கன.

பண்டை நாகரிகத்தையும் மக்கள் வாழ்க்கைத் தரத்தையும் இன்று வாழும் மக்களுக்குத் தெரிவிப்பதில் ஓவியங்களுக்கும் பங்குண்டு. இவ்வோவியங்கள் வருங்கால சந்ததியார்களுக்கு தம் நிலையையும் பெருமையையும் விளக்குவன போல் இன்றைய நாகரிகத்தையும் பின்வரும் சந்ததியாருக்குத் தெரிவிக்கப் பல ஓவியக் கலைஞர்கள் எழுந்தனர். அவர்களுள் தென்னாட்டில் ஓவியக் கலையை வளர்த்தவர் ராஜா ரவிவர்மா.

இன்று கேரளம் என்று அழைக்கப்படும் பண்டைத் திருவாங்கூரில் கிளிமானூர் என்னும் இடத்தில் 1848ல் ரவிவர்மா பிறந்தார். இவர் தந்தையார் ராஜா வர்மா என்னும் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். இவரது தாய் மாமனான ராஜா ராஜா வர்மா சிறந்த ஓவியராய்த் திகழ்ந்தார். இவரது ஓவியங்களைக் கூர்ந்து நோக்கிய ரவிவர்மா தானும் ஓவியராகத் திகழ வேண்டுமென்ற ஆசைகொண்டு பல படங்களை வரைந்தார். மருமகனின் ஓவியங்கள் மாமாவின் உள்ளத்தை ஈர்த்தன. அந்த ஓவியங்கள் ரவிவர்மாவின் எதிர்காலத்தை வளப்படுத்தும் என்பதை உணர்ந்துகொண்ட அவர் அக்கலையின் பல நுட்பங்களை அவருக்கு எடுத்மொழிந்தார். தமது இருபத்தைந்தாவது வயதில் ரவிவர்மா அரசகுடும்பத்தைச் சார்ந்த ஒரு பெண்ணை மணந்துகொண்டார். ஓவியக் கலையை விருத்தி செய்வதற்கு வேண்டிய சாதனங்கள் இத் திருமணத்தின் பயனாய் அவருக்குக் கிடைத்தன.

அக்காலத்தில் பாரத நாட்டில் வளர்ந்து வந்த ஓவியக் கலை பற்றிச் சிறிது ஆராய்வோம். பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வியாபாரத்தின் பொருட்டு வந்த கிழக்கிந்தியக் கம்பெனியார், தங்கள் ஆதிக்கத்தை வேரூன்ற வைத்துவிட்டனர். அவர் தம் ஆதிக்கத்தால் இந்திய அரசியல் மட்டுமன்றி; இந்தியக் கலைகளும் நசிக்கலாயின. சுதேச மன்னர்கள் ஐரோப்பியரின் கட்டிடக் கலையையும் நாகரிகத்தையும் பின்பற்றித் தம் கலைச் சுவையைக் குன்ற வைத்தனர். மக்களும் அவர்கள் கலையைப் பின்பற்றினர்.

ஓவியன் ஒரு பொருளைத் தன் கற்பனைக் கண்களால் கண்டு, அதன் உள்ளும் புறமும் ஆராய்ந்து மனோபாவங்களை உள்ளடக்கி வரையும் ஓவியமே சிறப்புப் பெறும் என்பதை நீக்கி இயற்கையை நகலாக்குவதையே ஓவியமெனக் கொண்டிருந்தனர் அக்கால ஓவியர்கள். இதன் காரணமாய், கிரேக்க நாட்டுச் சிற்பக் கலையும் வடநாட்டு புத்தக் கலையும் சேர்ந்து காந்தாரக் கலை உருவாகியது போல், இந்திய ஓவியக் கலையும் ஐரோப்பிய ஓவியக் கலையும் கலந்து புதிய ஓவியக்கலை உருவாயிற்று. வர்ணங்களை நீருடன் சேர்த்து வரையும் முறையும் எண்ணெய் வர்ணங்களால் ஓவியத்தைத் தீட்டும் முறையும் வழக்கத்திற்கு வரலாயின.

ஆகவே, அக்காலத்தில் சிறப்புப் பெற்றிருந்த ஓவியக் கலையை ரவிவர்மா கற்பதற்கு தியோடர்ஸன் என்ற ஆங்கிலேய ஓவியப் புலவரை 1868ம் ஆண்டு ஆசானாக அமர்த்தினார் தாய் மாமன்.

எண்ணெய் வர்ணத்தில் (Oil paint) ஓவியம் வரையும் முறையில் ரவிவர்மா நன்கு தேர்ச்சி பெற்றார். அவ்வோவியங்கள் பல பெரியார்களின் புகழுரை தாங்கி வையத்தில் பெருமை பெற்றன.

1873ம் ஆண்டு சென்னையில் நடந்த பொருட்காட்சியொன்றிற்கு ரவிவர்மா ஒரு நாயர் குலமகளை ஓவியமாகத் தீட்டி அனுப்பியிருந்தார். அவ்வோவியமே முதற் பரிசாகத் தேர்ந்தெடுக்கப்பெற்று கவர்னரின் தங்கப் பதக்கத்தைப் பெற்றது. பின்னர் அவ்வோவியம் வீயன்னா நகரில் நடந்த பொருட்காட்சி சாலையிலும் முதற்பரிசு பெற்றது.

1874ல் நடந்த பொருட்காட்சியில், ரவிவர்மா வரைந்த "தமிழகப் பெண்"ணின் படம் அப்போது கவர்னராக இருந்த ஹாபர்ட் அவர்களைக் கவர்ந்தது. அந்தச் சித்திரத்தின் சிறப்பை உணர்ந்த மன்னர் அதனை விலைக்கு வாங்கி அப்பொழுது இந்தியாவுக்கு வந்திருந்த எட்வர்டு இளவரசருக்குப் பரிசாகக் கொடுத்தார்.

பின்னர் ரவிவர்மா இந்திய தெய்வங்களின் படங்களை வரைந்து புகழ்பெற்றார். இராமாயணம், மகாபாரதம், சகுந்தலை நளவெண்பா ஆகிய புராண நூல்களைத் தழுவியும் அவரது ஓவியங்கள் எழுந்தன. அத்தகைய ஓவியங்கள் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாய் அமைந்தன. தெய்வ மணங்கமழுவதாயும் இருந்தன. ஆகவே, அவ்வோவியங்கள் மூலமாக கடவுளை மக்கள் வணங்கினர். அவற்றில் பல படங்களை பக்கிங்ஹாம் என்பவர் உயர்ந்த விலைகொடுத்து வாங்கிக்கொண்டார்.

இராமபிரானின் பிரிவை நினைந்து அசோக வனத்தில் சீதை ஏக்கத்தோடு இருந்ததைச் சித்திரிக்கும் சித்திரமொன்றை பரோடா மன்னர் வாங்கித் தம் அரண்மனையை அலங்கரித்துக் கொண்டார். அன்றியும் பாரீஸ் நகரத்தில் இவரது ஓவியங்கள் பலரால் புகழப்பட்டன.

இத்தகைய பீடுபெற்றுத் தென்னாட்டு ஓவிய மன்னனாக—ஏன்? உலக ஓவிய மன்னனாக விளங்கிய ரவிவர்மா, 1906-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 18-ம் நாள் இயற்கை எய்தினார்.

அவரது பிரிவை நினைந்து ஓவிய உலகமே அழுதது. அதனை புதுமைக் கவிஞர் பாரதியார்,

"மலரினில் நீலவானில் மாதரார் முகத்தி லெல்லாம்
இலகிய அழகை ஈசன் இயற்றினன், சீர்த்தி இந்த
உலகினில் எங்கும் வீசி, ஓங்கிய இரவி வர்மன்
அலகிலா அறிவுக் கண்ணால் அனைத்தையும் நுகருமாறே

"மன்னர் மாளிகையில் ஏழை மக்களின் குடிலில் எல்லாம்
உன்னருந் தேசுவீசி உளத்தினைக் களிக்கச் செய்வான்
நன்னரோ வியங்கள் தீட்டி நல்கிய பெருமான், இந்நாள்
பொன்னணி உலகு சென்றான் புவிப்புகழ் போதுமென்பான்"

என்று ஈசனையும் ரவிவர்மாவையும் பிணைத்துப் புகழ்ந்து பாடியுள்ளார். வேறுபல கவிஞர்களும் அவர் மரணத்திற்கு இரங்கற் பாமாலை அணிவித்தனர்.

ரவிவர்மாவின் பல ஓவியங்களை இன்றும் திருவனந்தபுரத்திலுள்ள கலைக் கூடத்தில் காணலாம். அவ்வோவியங்களிலொன்று காலை மலருகின்ற மென்பொழுதையும் அது பொழுது மாதரார் செயலையும் தெளிவாக்குகிறது. பெரிய மாளிகையொன்று தீப்பற்றி எரியும் காட்சி பார்ப்பவர்களை ஈர்க்கும் பேராற்றல் வாய்ந்ததாகத் திகழ்கிறது. இத்தகைய நன்னரோவியங்கள் தீட்டி வையகமே புகழும் ஓவிய மன்னராகத் திகழ்ந்தாலும் இந்திய ஓவியக்கலை மரபில் அவருக்கு இடமில்லை.

தனது பேராற்றலால் இந்திய ஓவியக் கலையையும் ஐரோப்பிய ஓவியக் கலையையும் உருவாக்கி, அதனைக் குறிக்கோளாகக் கொண்டு பிற ஓவியர்களால் வரைப்படும் ஓவியங்களுக்கெல்லாம் மன்னராய் விளங்கினார் ரவிவர்மா. அவர் புகழ் வளர்க!

## திருச்சி — விழுப்புரம் மின்சார ரயில் பாதை

தென்னாற்காடு மாவட்ட ரயில் பிரயாணிகள் சங்கக் காரியதரிசி திரு. எஸ்.ஆர். சீனிவாச தாத்தாச்சாரி, ஏப்ரல் 13-ந் தேதி சிதம்பரத்திற்கு வந்திருந்த ரயில்வே துணை அமைச்சர் திரு. எஸ். வி. ராமசாமியிடம் ஒரு மகஜர் சமர்ப்பித்தார். அதில், விழுப்புரத்திலிருந்து திருச்சி வரை மெயின் லையனிலும், கார்டு லையனிலும் மின்சார ரயில்பாதை போட வேண்டுமென்றும், மூன்றுவது திட்டத்தில் இது சேர்த்துக்கொள்ளப்பட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப்பட்டிருந்தது. கவனித்து ஆவன செய்வதாக அமைச்சர் கூறினார்.

## திருக்குறள் வேளுக்கு பாராட்டு

தருமபுர ஆதீன கர்த்தரால் 'திருக்குறள் வேள்' என்ற பட்டமளிக்கப்பெற்ற திருச்சி திரு. ஜி. வரதராஜன் அவர்களைப் பாராட்ட லால்குடி திருவள்ளுவர் கழகச் சார்பில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. அப்பொழுது திரு. ஜி. வரதராஜன் அவர்களுக்கு ஒரு பொன்னாடை போர்த்தப் பெற்றது.

கழகத் தலைவர் திரு. எல். எஸ். ராமசாமி செட்டியார் அனைவரையும் வரவேற்றார். திருவாளர்கள். ஔவை துரைசாமி பிள்ளை, வால்குடி நடேச முதலியார், வெள்ளைவாரணனார், பஞ்சநதன் பிள்ளை, வித்வான் சிங்காரவேலன், கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பேசினர்.

திரு. எல். எஸ். ஆறுமுகம் வரவேற்பிதழ் வாசித்தளித்தார். திரு. வரதராஜன், தமக்களித்த பாராட்டுக்கு நன்றி தெரிவித்தார்.

## தீக்குச்சி உற்பத்தி

பட்டுக்கோட்டையில் நிறுவப்படும் தீக்குச்சி உற்பத்தித் தொழிற்சாலை இம்மாதக் கடைசியில் வேலை துவங்கும் என்று தொழில்மைச்சர் திரு. வெங்கட்ராமன் அறிவித்தார்.



இந்திய ஆலயக் கட்டடக் கலைக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் காஜுராஹோவிலுள்ள "லக்ஷ்மண்" ஆலயம். இங்கு சைவ வைணவ ஜெய்ன ஆலயங்களின் உயர்கோபுரங்கள் கைதேர்ந்த சிற்பிகளால் கட்டப்பெற்றவை.

## மருதையாற்றுப் பாலம் புதுப்பிக்கப்படும்

அரியலூர் அருகேயுள்ள மருதையாற்றுப் பாலம் புதுப்பிக்கப்படும் என்ற தகவலை திருச்சி பிராந்திய ரெயில் போக்குவரத்து அதிகாரி திரு. எஸ். ஜி. ராமன் வெளியிட்டார்.

திருச்சி விழுப்புரம் ரெயில் பாதையிலுள்ள இந்தப் பாலம் தற்போது உள்ளதைவிட 6 அடி உயரத்திற்கு உயர்த்தப்படும் என்றும், பாலத்தை உயர்த்தும்போது அதன் அகலமும் அதிகரிக்கப்படும் என்றும் அவர் கூறினார்.



Edited Printed & Published by Triloka Sitaram for The Shivaji Private Ltd., at S. N. Printers, Tiruchy-2.